# ஜானி ஆப்பிள்சீட்

## விதைக்கப் போகிறான்



# ஜானி ஆப்பிள்சீட்

## விதைக்கப் போகிறான்



ஜானி சாப்மேன் உண்மையில் வாழ்ந்த ஒரு கிராமத் தலைவன். அவன் நாடு முழுவதும் ஆப்பிள் தோட்டங்களை அமைத்ததால் அவனை அந்த கிராம மக்கள் ஜானி ஆப்பிள்சீட் என்று அழைத்தனர்.

புராணம் எப்போதுமே விஷயங்களை மிகைப்படுத்திச் சொல்லும். அது போல ஜானி செய்ததாக கிராமத்தில் கூறுபவை எல்லாம் நடந்திருக்க வாய்ப்பில்லை. ஆனால் ஜானி மனிதர்கள் மீதும், விலங்குகள் மீதும், அமெரிக்காவின் காடுகளின் மீதும் மிகுந்த கருணையுடன் இருந்தான் என்பது உண்மை.

ஜானி ஆப்பிள்சீடின் நிஜப்பெயர் ஜானி சாப்மேன் என்று அறிந்தோம். அவன் சென்ற இடமெல்லாம் ஆப்பிள் விதையை விதைத்ததால் இந்தப் பெயர் பெற்றான்.



ஜானி செப்டம்பர் 26, 1774 ல் அமெரிக்காவில் உள்ள மசாசுசட்சில் பிறந்தான். அவன் அப்பா ஒரு விவசாயி. ஜானி விவசாய வேலைகளில் உதவி செய்வான்.

ஆப்பிள் தோட்டத்தைப் பார்த்துக் கொள்வது ஜானிக்குப் பிடித்தமான வேலை. ஆப்பிள் மரங்களில் ஏறி பளபளப்பான, சிவப்புநிற பழங்களை பறிப்பது அவனுக்குப் பிடிக்கும்.

ஜானி இளைஞனாக இருந்தபோது பலர் மேற்கே ஒஹியோ போன்ற தூர தேசங்களுக்குச் சென்று குடியேறினர். நிலங்களை சுத்தம் செய்து வீடு கட்டி பயிர் செய்யும் பணிகளில் இருந்த அவர்களுக்கு ஆப்பிள் மரங்களை நட நேரமே இல்லை.



அவர்களுக்கு ஆப்பிள் மரங்கள் இல்லாமல் இருந்தது ஜானிக்கு வருத்தம். வசந்த காலத்தில் அழகான இளஞ்சிவப்பு பூக்களை அவர்கள் காணலாம். இலையுதிர் காலத்தில் அதன் சுவையான ஆப்பிள்களைத் தின்னலாம்.  குளிர் காலத்தில் சூடான ஆப்பிள் பஜ்ஜி சாப்பிடலாமே!

அதனால் அவர்களுக்கு எப்படியாவது உதவ நினைத்தான்.



ஓஹியோ எடுத்துச் செல்ல ஒவ்வொரு குடும்பத்திற்கும் ஒரு ஆப்பிள் மரம் கொடுக்க நினைத்தான் ஜானி. ஆனால் அவர்கள் வண்டியில் மரத்திற்கு இடமே இல்லை.

சட்டென்று ஜானிக்கு ஒரு யோசனை வந்தது. அவர்களுக்கு ஆப்பிள் விதைகளைக் கொடுக்க முடிவு செய்தான். அவன் சாப்பிடும் ஆப்பிளின் விதைகளை சேமித்து சிறு பைகளில்,எல்லோருக்கும் கொடுத்தான்



விதைகளை ஓஹியோ செல்பவர்கள் நன்றியுடன் வாங்கிக் கொண்டனர். ஆனால் ஆப்பிள் மரங்களை வளர்க்க தங்களுக்கு நேரம் இருக்கும் என்று அவர்கள் நினைக்கவில்லை.





“விதைகளை விதைத்த பின் அதைச் சுற்றி வேலி போட வேண்டும். இல்லாவிட்டால் மான்கள் இளஞ்செடிகளைத் தின்றுவிடும். செடியைச் சுற்றி களைகள் வராமலும் பார்த்துக் கொள்ள வேண்டும்.” ஜானி அவர்களிடம் சொன்னான்.

ஒரு நாள் ஜானிக்கு இன்னொரு யோசனை தோன்றியது. “நான் ஒஹியோ செல்லப் போகிறேன்.” என்று அம்மா அப்பாவிடம் சொன்னான். “நானே அவர்களுக்கு ஆப்பிள் தோட்டம் நடப் போகிறேன்”

“ஆனால் நீ தனியாக இருப்பாயே. குடும்பம், நண்பர்களைப் பிரிந்து வருத்தப் படுவாயே!” என்றார் அப்பா.



“அப்படி சுலபமாக நீ காட்டுக்குள் செல்ல முடியாது ஜானி. காட்டு விலங்குகள் இருக்கும். பனிப்புயல் வந்தால் என்ன செய்வாய்? எங்கே தூங்குவாய்?” என்று கவலைப் பட்டாள் ஜானியின் அம்மா.

“நான் கீழே படுத்துக் கொள்கிறேன் அம்மா. வானமே சிறந்த கூரைதானே?” என்றான் ஜானி.



ஜானியின் அம்மா அப்பா கவலைப் பட்டார்கள். ஆனால் அவன் ஒரு முடிவோடு இருப்பதைப் புரிந்து கொண்டார்கள். அவன் பொருள்களை மூட்டை கட்ட உதவினார்கள். அவன் அம்மா அவனுக்கு குளிராமல் இருக்க ஒரு கோட் செய்தாள். அவன் சமைத்து சாப்பிட ஒரு நல்ல பாத்திரத்தைக் கொடுத்தாள்.





கிளம்புவதற்கு முன் சைடர் மில்லிற்குச் சென்றான். அங்கே நிறைய ஆப்பிள்களை ஜூஸ் செய்ய உபயோகிப்பார்கள். அவர்களிடம் ஆப்பிள் விதைகளைக் கேட்டான் ஜானி. “எவ்வளவு வேண்டுமோ எடுத்துக் கொள்” என்றார் அதன் உரிமையாளர்.

ஜானி நிறைய விதைகளை எடுத்துக் கொண்டான். அவன் பை நிரம்பி இடம் போதவில்லை. அம்மா கொடுத்த பாத்திரத்தை தலையில் கவிழ்த்துக் கொண்டான்.

"இது ஒரு அழகான தொப்பி" என்றான்.



அவன் பயணம் அவ்வளவு சுலபமாக இல்லை. ஆப்பிள் விதைகளுடன் நூற்றுக் கணக்கான மைல்கள் நடந்தான்.

வழியில் விவசாயிகளுக்கு விறகு வெட்டிக் கொடுத்தும் வேலிகளை சரிசெய்து கொடுத்தும்  உதவினான். அவர்களும் அவனுக்கு உணவளித்தனர். இப்படியே ஜானி பல புது நண்பர்களைப் பெற்றான்.



நட்சத்திரங்களைப் பார்த்துக் கொண்டு வெளியே தூங்குவது ஜானிக்குப் பிடித்தது. அவன் அம்மா கவலைப் பட்டிருக்கவே வேண்டாம். விலங்குகள் அவனிடம் அன்புடனே இருந்தன. ஒரு நாள் பயங்கரமான பனிப்புயலில் ஒரு கரடியின் கூடவே தூங்கினான் ஜானி. .



ஒருவழியாக ஓஹியோ வந்து சேர்ந்த ஜானி ஆற்றங்கரைகளில் ஆப்பிள் விதைகளை விதைத்தான். முட்புதர்களை வைத்து அவற்றைப் பாதுகாக்க வேலி அமைத்தான்.



பின்னர் இன்னொரு இடத்திற்குச் சென்று அங்கும் விதைத்தான். முன்னால் நட்ட இடத்தில் வளரும் செடிகளையும் திருப்பிச் சென்று பாதுகாத்தான்.

அந்தச் செடிகள் வளர்ந்ததும் தோண்டி எடுத்தான். ஒவ்வொருவரும் தோட்டம் வளர்த்துக் கொள்ள அவற்றைக் கொண்டு கொடுத்தான்.

"இன்னும் சில வருடங்களில் இந்த மரத்திலிருந்தே உங்களுக்கு ஆப்பிள் பழங்கள் கிடைக்கும். வசந்தம் வரும்போது இளஞ்சிவுப்பு வண்ணப் பூக்கள் பூக்கும். அதைவிட அழகான காட்சி இருக்க முடியாது."

ஜானி இப்படி ஓஹியோ பள்ளத்தாக்கின் பல இடங்களில் மரங்களை நட்டான். மக்கள் அவனை ஜானி ஆப்பிள்சீட் என்று கூப்பிட ஆரம்பித்தனர்.

அவன் அவர்களுக்கு வேறு பல உதவிகளையும் செய்தான். சோளம் நடுவது, மரச்சாமான்கள் செய்வது இப்படி பல.

அவர்கள் ஜானியின் வருகையை எதிர்பார்த்துக் காத்திருந்தனர்.

“கைகால் அலம்பிட்டு சாப்பிட வாங்க. இன்னிக்கு ஜானி ஆப்பிள்சீட் வரப் போறாரு!”



தன் வாழ்க்கை முழுவதையும் அடுத்தவருக்கு உதவுவதற்காகவே செலவிட்டார். அவர் இறக்கும் முன் ஒஹியோ பள்ளத்தாக்கில் பல ஆப்பிள் மரங்கள் பூத்துக் காட்சியளித்தன.



இன்றும் ஆப்பிள் மரங்களைப் பார்க்கும் சிலர் ஜானி ஆப்பிள்சீடை நினைத்துக் கொள்கிறார்கள்.

**முற்றும்**